Registered No. M. 2330.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"



| மலர் எ | ஸ்ரீமுக ஆண்டு மாசித் திங்கள் 1934 ஞூ பிப்ரவரிமீ | இதழ் உ |
|---|---|---|



## சுவாமிநாத பண்டிதர்

[பத்திராசிரியர்]

ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்கள் தமது எழுபத்திரண்டாம் வயதில் சிவசிவ என்று சொல்லிக்கொண்டே சிதம்பரத்தில் மார்கழிமீ உ௫-ம்நாள் சனிக்கிழமை(6-1-1934) பூரநக்ஷத்திரத்தில் தில்லைக்கூத்தன் திருவடிப் பேறெய்தினார்கள். யாழ்ப்பாணத்திலுள்ள வண்ணார்ப்பண்ணையில் வேளாளர் குலத்தில் சின்னத்தம்பையா பிள்ளை என்பவருடைய தவப் புதல்வராய்த் தோன்றி, தம்பையாபிள்ளையென்ற பெயரோடு இளமையிலேயே முறையாகத் தமிழையும் சைவ நூல்களையும் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலருடைய சீடருள் ஒருவராகிய ந. ச. பொன்னம்பலம் பிள்ளையவர்களிடம் ஓதியுணர்ந்து, தம்பையா உபாத்தியாயரென வழங்கப் பெற்றுப், பல ஆண்டுகள் சுயமத ஸ்தாபனம் பரமத கண்டனம் செய்வதில் யாழ்ப்பாணத்துச் சைவ பரிபாலன சபையா

ரோடும் ஏனைய தொண்டர்களோடும் இவர் ஒத்துழைத்தனர். பிறகு பாண்டிநாட்டை யடைந்து திருவாளர் - வயி-நாக-ராம-அ. வேங்கடாசலம் செட்டியார் முதலிய பல தனவணிகரைச் சீடராகக் கொண்டு காரைக்குடி, அமராபதி புதூர் முதலிய பல ஊர்களில் சித்தாந்த சாத்திரபாடம் சொல்லிவைத்தார்கள். சைவபுராணங்களைப் பக்திச் சுவை ததும்புமாறு பிரசங்கம் செய்வதில் மிக்க ஆற்றல் வாய்ந்தவராக விளங்கினமையால் இவர் சுவாமிநாத பண்டிதரென வழங்கப்பட்டார் போலும். ஏறக்குறைய முப்பது ஆண்டுகட்கு முன்னர் சென்னைக்கு வந்து "சைவ வித்தியாநுபாலன யந்திரசாலை" என்றொரு அச்சுக்கூடத்தைத் தாபித்து பல அரிய நூல்களைத் திருத்தமாக வெளியிட்டார். அவற்றுட் சிறந்தன சிவஞான போத மாபாடியமும், தலமுறைத் தேவாரமுமே யாகும்.

திருச்செந்தூரிலே "சுப்பிரமணிய வித்தியாசாலை" ஒன்றை நிறுவி, அதற்கு இருப்பிடம், மூலதனம் முதலியன வைத்து 1930ஆம் புதிய கட்டிடத் திறப்பு விழாவையும் செவ்வையாக நடத்திவைத்தார். நமது சமாஜ ஆண்டு விழாக்களில் 1918ஆம் கும்பகோணத்திலும் 1920ஆம் மாயூரத்திலும் 1921ஆம் மகாமகத்தில் கும்பகோணத்தில் சமாஜ விசேஷ மகாநாட்டிலும் தலைமை வகித்தார். பல ஆண்டுகள் நம் சமாஜத்து உதவித் தலைவராகவு மிருந்து தொண்டு புரிந்தார். சைவசமயத்துக்காக வேண்டும்போதெல்லாம் பொருளுதவி புரிவதில் முந்துவார். ஸ்ரீமான் கதிரைவேற் பிள்ளையவர்கள் காலத்தில் அருட்பா மருட்பா வழக்கு நடந்தபோதும், ஸ்ரீலஸ்ரீ பாம்பன் குமரகுருதாசசுவாமிகள் காலத்தில் சைவ வைணவ வழக்கு நடந்தபோதும் பொருளுதவி செய்து வழக்குகளை வெற்றி யடையும்படி செய்தார். எத்தனையோ மாணக்கர்கட்குச் சித்தாந்த சாத்திரபாடம் சொல்லிவைத்தார். இல்வாழ்க்கையிற் புகாது, தமது காலத்தைச் சமயப் பணியிலேயே செலுத்தினர்.

பண்டிதரவர்கள் சமயத்துறையில்பழமையைப் பேணும் கொள்கையினர். சீர்த்திருத்தக்காரர்களைப் பலமுறை பலமாகக் கண்டிப்பார். பண்டிதரவர்கட்கும் நமக்கும் சிற்சில

கருத்து வேறுபாடுகள் உண்டு. அவை "சிவநேசன்" பத்திரிகையிலும், நமது பத்திரிகையிலும் சில சந்தர்ப்பங்களையொட்டி வெளியாயின. எது எப்படியாயினும் பண்டிதரவர்களுடைய சமயப் பற்றையும் சைவசமயம் என்றும் நிலைத்திருத்தல் வேண்டுமென்ற ஆர்வத்தையும் எவரும் குறைவாக எண்ண இயலாது.

பண்டிதரவர்கள் பிரிவாற்றுமையைத் தெரிவிக்கச் சமாஜப் பொதுக்கூட்டம் ஒன்று திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்கள் தலைமையில் 17-1-34ல் சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய சபையின் "குகானந்த நிலைய"த்தில் கூடிற்று. திருவாளர்கள் - குப்புச்சாமி முதலியார், சமரபுரி முதலியார், கலியாணசுந்தர முதலியார் ஆகிய மூன்று பேரறிஞர்கள் பண்டிதரவர்கள் சரித்திரக் குறிப்புக்கள், தொண்டு முதலியனபற்றிப் பேசினார்கள். பிறகு தலைமை பூண்ட பெரியார் பண்டிதரவர்கள் ஞாபகார்த்தமாக நாம் செய்யவேண்டுவனவற்றைத் தொகுத்துக் கூறினார். இறுதியில் பண்டிதர் சிவபதமடைந்ததால் சைவ சமயிகட்குள்ள பிரிவாற்றுமையைத் தெரிவிக்கும் தீர்மானம் ஏகமானதாக நிறைவேறிற்று. பண்டிதரவர்கள் ஆன்மா பரமன் திருவடியில் சாந்தி யடைவதாக.



# அரிப் பிரமாதிகள் வணக்கம்

[சு. பொன்னுஸ்வாமி குருக்கள், அம்மன்கோயில், சுதுமலை]

அரசனேயன்றி அரசனுடைய ஆணையைத் தாங்கி உலகம்புரக்கும் மந்திரி பிரதானி முதலாயினரும் அரசமரியாதையைப் பெறுதற்கும் உலகத்தாரால் ஏத்தப்படுதற்கும் உரியராயிருத்தல் போல, முழுமுதற் பொருளாகிய சிவம் மாத்திரமன்றி அச்சிவத்தின் சத்தியினால் நடத்தப்படும் கர்த்தாக்களும் அச்சக்தியுடைமை காரணமாக வணங்கப்படுதற்கு உரியரேயாவர். மகேசுவர சதாசிவ வடிவங்கள்

சிவம் நேரிற்கொண்ட வடிவங்களாதலால், சிவமாகவே வணங்கப் படல்வேண்டும். உருத்திர வடிவம் சிவசத்தியினால் அதிட்டிக்கப் படுதலும் சிவனுக்குரிய வடிவங்கள் அமையப் பெற்றது மாயிருத்தலால், சிவமென்றே பாவித்து வணங்கப்படல் வேண்டும். பிரம விட்டுணுக்களும் சிவசத்தியினா லதிட்டிக்கப் பட்டுச் சிவனுக்குரிய படைத்தல் காத்தல்களைச் செய்வதால் சிவபேதத்துள் வைத்து வணங்கப் படலாம்.

இன்னுஞ் சிவபேத வடிவங்கள் அணுபட்ச சம்புபட்ச வேறுபாட்டால் இருவகைப்படும். அணுபட்சமே சிவசத்தியின் அதிட்டானத்திற்கு உரியனவாய் இங்கே சொல்லப் பட்ட இயல்புகள் பெற்று விளங்கும் மூர்த்திகளாம். இதன் மேலும் சம்பு பட்சமென ஒரு நிலையுண்டு. அம்சம்பு பட்சத்திலும் அணுபட்சம் போலப் பிரம விட்டுணு உருத்திர மகேசுவர சதாசிவாதி பேதங்கள் உள்ளன. அவை பூசைத் தியானுதிகளின் பொருட்டுக் கற்பிதமாகவும், அணுபட்ச மூர்த்திகளை அதிட்டிக்கும் சிவசத்தியாற் கொள்ளப்படும் சத்திகாரிய சிற்கன மேனிகளாயிருக்கும். அவையாவும் சிவ வடிவங்களே யாதலால் அவை சைவர்களது வழிபாட்டுக்கு என்றும் உரியனவேயாம்.

அடியார்களுக்கு அநுக்கிரகஞ்செய்யும் முறைபற்றியும் ஐந்தொழில் செய்யும் வேறுபாடு பற்றியும் அணுபட்ச சம்பு பட்ச மூர்த்திகளுள் அவ்வப் பொழுது கொள்ளப்பட்ட வெவ்வேறு வடிவங்களும்உள. அவை இருபத்தைந்து கேவல மூர்த்திகளாகவும் அவற்றினின்றும் விரிந்த வேறுபல வடிவங்களாகவும் விளங்கும். அவை யெல்லாஞ் சிவபேத வடிவங்களே யாகலின் வழிபடற் குரியனவேயாம்.

இனிச், சிவத்தை நேரேஞானனந்த வடிவினதாக வழிபடுதலினும், சிவசத்தி நேரிற் கொண்டதும் அதிட்டானமாகக் கொண்டதுமான மூர்த்திகளை வழிபடுதலினும் பிரயோசனம் வேறுபாடு மிகவுண்டு. சிவத்தை நேரேவழிபடுதலால் அடையும் முத்தி, பரமுத்தியாம். சத்திகாரிய வடிவங்களை வழிபடுதலால் அடையும் முத்தி அபரமுத்தியாம்.

அதிட்டான வடிவங்களுள் சிவபேதமான பதிவர்க்கத்தை வழிபடுதலால் அடையும் முத்தி பதமுத்தியாம். சகலவர்க்கத்துட்பட்ட விட்டுணுவை வழிபடுதலால் அடைவது புத்தியென்னும் போகத்துட்பட்ட வைகுந்தபதமாம். பிரமாவின் வணக்கத்தால் அடைவது பிரமலோக வாழ்வாம். இங்ஙனம் அவையெல்லாம் பயன்றரு முறையால் அநேக விதமாம்.

சிவம் உயிர்களைச் சோபான முறையாய் நிறுத்தி அநுக்கிரகித்து ஈற்றில் ஞான நெறியில்வைத்து முத்தியடைவிக்கும். அதனால் எல்லாவழிபாடுகளும் வேண்டப் படுவனவேயாம். ஆயினும் முதிர்ந்த பரிபாகி சிவவழிபாடு ஒன்றிற்கேயுரியவனாவான். அதுவே சித்தாந்த வழிபாடாம். சிவமொன்றே அச்சைவர்கள் வணங்குந் தெய்வமாம்.

# தேவாரத்தில் சிவகுமாரர்கள்

[தி. கு. கி. நாராயணசாமி]

பக்கம்* கணபதி

1 சம்பந்தர் 181 **தந்தமதத்தவன்** தாதையோதான் (1: 115: 2)†

2 ,, 194 வழிபடும் அவரிடர் கடிகணபதிவர அருளினன் 1 : 123 : 5

3 ,, 380 கரியின்மாமுகமுடைய கணபதி தாதை 2:96: 3.

4 அப்பர் 5 கலமலக்கிட்டுத்திரியுங் கணபதி என்னுங்களிறு 4 : 2 : 5.

5 ,, 415 கைவேழ முகத்தவனைப் படைத்தார்போலும் கயாசுரனையவனாற் கொல்வித்தார் போலும் 6 : 53 : 4.

---

* சமாஜப் பதிப்பின் பக்கம்.

† முதல் திருமுறையில் 115-ம் பதிகத்தில் 2-ம் பாட்டு.

பக்கம் **முருகன்**

6 சம்பந்தர் 21 குறிஞ்சியது பாடி **முருகன்னது பெருமை** பகர் முதுகுன்று 1 : 12 : 10.
7 ,, 181 **தழைமயிலேற்வன்** தாதையோதான் 1 : 115 : 3.
8 ,, 322 **மாயச்சூர் அன்றறுத்தமைந்தன்** தாதை 2 : 62: 1.
9 ,, 325 **வள்ளி**முலைதோய் **குமரன்** தாதை 2 : 63 : 6.
10 ,, 340 **இளம் குமரன்** றன்னைப் பெற்றிமையவர்தம்பகை எறிவித்த இறை 2 : 73 : 1.
11 ,, 343 **சேந்தனை** முன்பயந்துலகில் தேவர்கள் தம்பகை கெடுத்தோன் 2: 74 : 6.
12 ,, 365 **மடமயில்ஊர்தி** தாதை 2 : 87 : 2.
13 ,, 411 **சாமி** தாதை 2 : 115 : 9.
14 ,, 482 **குமரவேள்** தாதை 3 : 35 : 6.
15 ,, 604 பெற்றும் உகந்தது **கந்தனையே** 3 : 113 : 1.
16 அப்பர் 31 **ஆறு**கொலாமவர் தம்மகனார் முகம் 4 : 18 : 6.
17 ,, 69 நற்**கடம்பன்** தாதை 4 : 43 : 2.
18 ,, ,, **சேந்தனை** மகனாக் கொண்டார் 4 : 43 : 8.
19 ,, 92 குறவிதோள் மணந்த **செவ்வக்குமரவேள்** தாதை 4 : 60 : 3.
20 ,, 115 **கடம்பமர்காளை** தாதை 4 : 75 : 4.
21 ,, 190 மயிலூர்தி **முருகவேள்** 5 : 16 : 7.
22 ,, 195 நங்கடம்பனைப் பெற்றவள் 5 : 19 : 9.
23 ,, 261 சமர சூரபன்மாவைத் தடிந்த **வேற்குமரன்** தாதை 5 : 64 : 10.
24 ,, 263 **குமரன்** வணங்குங்கழல் 5 : 65 : 10.
25 ,, 288 **கடம்பன்** தாதை 5 ; 84 : 6.
26 ,, 325 **சரவணத்தான்** கைதொழுதுசாரும் அடி 6: 6: 1.
27 ,, 348 பன்னிரண்டு *கண்ணுடைய **பிள்ளை** தோன்றும் 6 : 18 : 4.
28 ,, 358 நஞ்செந்தின் மேய **வள்ளிமணாளற்குத்** தாதை 6 : 23 : 4.

---

*பாடபேதம் - கையுடைய.

| | அப்பர் | பக்கம் | |
|---|---|---|---|
| 29 | ,, | 361 | குமரன் காண் 6 : 24 : 8. |
| 30 | ,, | 394 | குமரன் தாதை 6 : 42 : 6. |
| 31 | ,, | 415 | குமரனையும் மகனாகவுடையார் போலும் 6: 53: 2 |
| 32 | ,, | 457 | கூரிலங்கு வேற்குமரன் தாதை 6 : 75 : 7. |
| 33 | ,, | 482 | கோழிக்கொடியோன் தாதை போலும் 6: 89 : 2. |
| 34 | சுந்தரர் | 31 | பொரும்பல மதுடையசுரன்தாருகனைப் பொருது பொன்றுவித்த பொருளினை முன்படைத்து கந்த புனிதன் 7 : 16 : 9. |
| 35 | ,, | 35 | குறவனார் தம்மகள் தம்மகனார் மணவாட்டி 7:18:6. |
| 36 | ,, | 71 | மயிலூர்தி முருகவேள் தாதை 7 : 38 : 8. |
| 37 | ,, | 113 | சேந்தன் அப்பன் 7 : 58 : 3. |
| 38 | ,, | 117 | காதலாற் கடற்சூர் தடிந்திட்ட செட்டியப்பன் 7 : 59 : 10. |
| 39 | ,, | 123 | குமரனைப் பயந்த வார்த்தயங்கிய முலைமடமானை வைத்து 7 : 62 : 4. |
| 40 | ,, | 124 | குமரன் முதற்றேவர் 7 : 63 : 2. |
| 41 | ,, | 127 | கடற்சூர் தடிந்திட்ட சேந்தர் தாதை 7 : 64 : 6. |
| 42 | ,, | 134 | அமரர் சேனைக்கு நாயகனான குறவர் மங்கைதன் கேள்வனை 7 : 68 : 7. |
| 43 | ,, | 143 | குமரன் திருமால் பிரமன் 7 : 73 : 9. |

**இருவர்**

| | | | |
|---|---|---|---|
| 44 | அப்பர் | 339 | குமரனும் விக்கின விநாயகனும் 6 : 13 : 10. |
| 45 | ,, | 439 | முருகவேட்குத் தாதைகாண் தண்கடமாமுகத்தி னாற்குத் தாதைகாண் 6 : 65 : 9. |
| 46 | ,, | 455 | அறுமுகனோடு ஆனைமுகற்கப்பன் தன்னை 6:74:7. |
| 47 | சுந்தரர் | 9 | கணபதியேல் வயிறுதாரி; அங்கைவேலோன் குமரன் பிள்ளை 7 : 5 : 2. |
| 48 | ,, | 90 | சிறுவனையுந் தேறேன்......பெருவயிறன் கணபதி 7 : 46 : 9. |

[குறிப்பு:—சாதாரணமாகத் தேவார பாராயணத்தில் பிடியத னுருவுமை, நங்கடம்பனை, சமரசூர என்ற மூன்று பாக்களே சிவ குமாரர்கள் குறிப்பாகப் பாடப்படுகின்றன. இனியேனும் மேலே கண்ட 48 பாடல்களிற் பலவற்றைப் பாடும் பழக்கம் ஏற்படுதல் நலம். —பத்திராசிரியர்.]

# சிவாகமசங்கம்—ஓர் அறிவிப்பு

[அள. சுப. பள. சுப்பிரமணியஞ் செட்டியார்]

தஞ்சையில் நடந்த சைவசித்தாந்த மகா சமாஜத்தின் ஆண்டு விழாவில், தேவகோட்டை சிவாகம சங்கம், பொருளி ருந்தும் பணியைச் செய்யவில்லை யென்று இளைஞர் மகாநாட் டுத் தீர்மானமாக சுதேசமித்திரனிலும், சைவர் மகாநாட்டுத் தீர்மானமாக சித்தாந்தத்திலும் வெளிவந்திருக்கின்றன. இத் தீர்மானமானது வாசகர்கள் மனதில் விபரீத வுணர்ச்சியை உண்டுபண்ணு மாதலால் உண்மையை அறிவிக்கின்றேன்.

1916-ம் வருடத்தில் சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம் நிறுவப்பெற்று, 1932-ம் வருடம் செப்டம்பர் மாதம் வரை நடந்து, வருவாயின்றி அம்மட்டில் அச்சங்கம் நின்று விட்டது. 1932-ம் வருடம் அக்டோபர் மாதம் முதல் சிவா கம சங்கம் எனப் பெயர் வைத்து என் சொந்தப் பொறுப் பில் நடந்து வருகிறது. முந்தின சங்கத்தில் வடமொழி யிலும் அதன் மொழிபெயர்ப்புத் தமிழ்மொழியிலுமாக அரு மையான பதினறு நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றுள் ஒன்றுன வடமொழி சோமசம்பு பத்ததிக்குத் தமிழ்மொழி பெயர்ப்பு இச்சங்கத்தில் இப்பொழுது அச்சாகி முடிந்திருக் கிறது. இன்னும் ஒரு மாதத்தில் வெளிவரும். மேலும் அச் சிடுதற்குப் பல நூல்கள் சித்தமாயிருக்கின்றன. இச்சங்கத் தில் அச்சிடப்படும் நூல்களெல்லாம் இதுவரை அச்சிற்கு வராமல் ஏட்டுப் பிரதியிலுள்ள சிவாகமங்களும் சிவாகம சம் பந்தமான வடமொழி நூல்களுமே. அவற்றைச் சேகரித்தலி லும் ஒப்பு நோக்குதலிலும் உள்ள சிரமமும் பொருட்செல வும் மிக அதிகம். பழைய நூல்களை மறைந்து போகாமற் காக்க வேண்டுமென்னும் நோக்கத்துடன் காரியம் நடந்து வருகின்றது. வெளிவரும் நூல்களை வாங்கி ஆதரிப்பவர் மிகச் சிலராயிருத்தலால், அதிக விலை மதிப்புள்ள புத்தகங் கள் கைவச மிருக்கின்றன.

சிவாகம சித்தாந்த பரிபாலனசங்கம் நடக்கும்பொழுது ஒருவர் ஐந்து பிள்ளைகட்குப் போஷணை கொடுத்து சங்கத்

துத் தமிழ் வித்துவானைக் கொண்டு சித்தாந்த சாத்திர பாடஞ் சொல்லும்படி செய்தனர். அவர்களுடைய வியாபாரம் நின்றுவிட்டமையால் அந்தப் பாடம் நடைபெறவில்லை. போஷணையின்றிப் படிக்க விரும்பு வோருக்குச் சித்தாந்த சாத்திரபாடஞ் சொல்லி வைப்பதில் இப்பொழுதுந் தடையில்லை.

சங்கத்தின் தற்கால நிலைமையையும் காரியம் நடந்து வருவதையும் நன்றாய்த் தெரிந்து கொள்ளாமல் சைவசித்தாந்த மகா சமாஜத்தார் தீர்மானஞ் செய்திருக்கின்றன ரென்பதை வாசகர்கள் அறிந்து கொள்வார்களாக.

குறிப்பு :—1932ஆண்டுக்கு முன் சிறப்பாக நடந்தபடியே பல தன வணிகர்களின் கூட்டுறவோடு மீண்டும் இச்சங்கம் தொண்டு புரிதல் வேண்டும் என்பதை வற்புறுத்தவே சமாஜத் தீர்மானம் நிறைவேறிற்றே யொழிய, நடந்துவரும் தொண்டினையாவது நடத்திவரும் தொண்டரையாவது குறை கூறுவதற்காக அன்றென்பதை நினைவூட்டுவது நமது கடமை - பத்திராசிரியர்.

---

# சமாசம் நடத்தப்போகிற சைவத் தேர்வுகள்

1. தேர்வுகளின் பெயர் :—(i) இளஞ் சைவப் புலவர் தேர்வு (ii) சைவப் புலவர் தேர்வு இவை முறையே முதற்றேர்வு இரண்டாந் தேர்வெனக் கீழே குறிக்கப்படும்.

2. நடக்கக் கூடிய இடங்கள் :—சென்னை, சிதம்பரம், தஞ்சை, திருச்சி, மதுரை, திருநெல்வேலி, தூத்துக்குடி, சேலம், கோயம்புத்தூர், வேறு பிற தகுந்த இடங்கள்.

3. பதிவுத் தொகை. (பிரவேச கட்டணம்) முதற்றேர்விற்கு ஒரு ரூபாய், இரண்டாந் தேர்விற்கு இரண்டு ரூபாய்கள்.

4. யாருக்கு :—முதற்றேர்வு இருபத்தைந்து ஆண்டுக்குட்பட்ட யாவருக்கும்; இரண்டாந் தேர்வு யாவருக்கும் உரித்தானது. ஆண்டு உறுதிச் சீட்டு (Age certificate) தக்கவரிடம் பெற்று அனுப்ப வேண்டும்.

5. நடை முறை :—பதிவுத் தொகையுடன் மனுத்தாளனுப்பும் கடைசி தேதி : 20-8-34. தேர்வு நடக்குந் தேதி : 15-11-34. முடிபு வெளியிடல் : 10-12-34. பட்டம் வழங்கல், பரிசளித்தல்:— சைவ சித்தாந்த மகாசமாஜ 29-வது மகா நாட்டில் 1934ஆ டிசம்பர்மீ கடைசி வாரத்தில். மேற்கண்ட தேதிகளைப் பலர் சௌகரியத்தை முன்னிட்டுச் சில நாட்கள் முன் பின்னாக மாற்றி இரண்டு திங்களுக்கு முன்னாகவே அறிவிக்கும் உரிமை சமாஜக் காரியதரிசிக்குண்டு. வேறு ஐயப்பாடுகளைத் தீர்க்கும் உரிமையும் அவருடையதே.

6. தகுதிச் சீட்டும் பட்டமும் :—மேற்படித் தேர்வுகளில் ஒவ்வொரு வினாத் தாளிலும் நூற்றுக்கு 25 வீதமும் மொத்தத்தில் நூற்றுக்கு 35 வீதத்திற்கு குறையாதும் வாங்குபவர் மூன்றும் வகுப்பிலும், நூற்றுக்கு 50 வீதத்திற்கு குறையாது வாங்குவோர் இரண்டாம் வகுப்பிலும், நூற்றுக்கு 60 வீதத்திற்கு குறையாது வாங்குவோர் முதல் வகுப்பிலும் தேறினவராகக் கருதப்படுவர். அதற்குத் தகுந்த தகுதிச் சீட்டுக்களும், இளஞ் சைவப் புலவர், சைவப் புலவர் என்ற பட்டங்களும் ஆண்டுவிழாவில் வழங்கப்பெறும்.

7. பரிசுகள் :—முதற் றேர்வில் முதற் பரிசு 40 ரூபா; இரண்டாந் தேர்வில் முதற் பரிசு 60 ரூபா. இத்தொகையைக் கொண்டு தங்கப் பதக்கம், புத்தகம் முதலியன வழங்கப்பெறும். ஒவ்வொரு தேர்விற்கும் இரண்டாம் மூன்றும் பரிசுகளாக சமாஜ வெளியீடு முதலிய புத்தகங்கள் தக்கபடி வழங்கப்படும்.

8. வினாத் தாள்களின் வகை தொகை :—ஒவ்வொன்றும் இரண்டரை மணிப்பொழுதில் எழுதக்கூடிய இரண்டு வினாத் தாள்கள் முதல் தேர்விற்கு உண்டு. இரண்டாந்

தேர்விற்கும் அப்படியே. ஆனால் ஒவ்வொரு வினாத் தாளும் மூன்றுமணிப் பொழுது எழுதக் கூடியதாகும். அவை முறையே I, II என அடியிற் குறிக்கப்பட்டுள்ள பாடங்களைப் பொறுத்ததாகும்.

9. பாடங்கள் :—

## முதல் தேர்வு

I (அ) தேவார திருவாசகப் பதிகங்கள் பத்து:—சம்பந்தர்-(க) திருநீலகண்டப் பதிகம், (உ) வாழ்க அந்தணர், அப்பர்-(ங) திருஅங்கமாலை, (ச) தனித்திருநேரிசை-தொண்டனேன் பட்டதென்னே, (ரு) தனித்திருவிருத்தம்-வெள்ளிக்குழைத் துணி, (சு) தனித்திருக்குறுந்தொகை - மாசில் வீணையும், (எ) தனித்திருத்தாண்டகம் - அப்பனீ அம்மைநீ, சுந்தரர் - (அ) பரவும் பரிசொன்றறியேன், வாதவூரர் - (கூ) திருவெம் பாவை, (க0) திருப்பள்ளி எழுச்சி.

(ஆ) பெரியபுராணம் - செய்யுள். இளையான்குடிமாற நாயனார்.

(இ) பெரியபுராண வசனம் - நாவலர்.

(ஈ) திருக்குறள்-ஐந்து அதிகாரம்:—கடவுள் வாழ்த்து, அறன் வலியுறுத்தல், அன்புடைமை, அருளுடைமை, வாய்மை.

(உ) சைவசமயநெறி :—மாணுக்க ரிலக்கணம் முழுவதும்; பொதுவிலக்கணம் 22ங் குறள் முதல் 75 முடிய; 131 முதல் 222 முடிய.

II (அ) திருவருட் பயன். (ஆ) உண்மை விளக்கம்.

(இ) சிவப்பிரகாசம்.

(ஈ) மெய்கண்டாரும் சிவஞானபோதமும் - சமாஜப் பதிப்பு.

## இரண்டாந் தேர்வு

I (அ) அகத்தியர் தேவாரத் திரட்டு உரையுடன்.

(ஆ) உமாபதிசிவம் அருண்முறைத் திரட்டு உரையுடன் (சமாஜப் பதிப்பு)

(இ) திருவாசகம் - அகவல் நான்கு.

(ஈ) பெரியபுராணம் - அப்பர்.

(உ) திருக்குறள் - அறத்துப்பால் முழுவதும்

(ஊ) சைவ சமய நெறி :—ஆசாரிய ரிலக்கணம் 20ங் குறள் முதல் 31 முடிய ; மாணுக்க ரிலக்கணம் முழுவதும் ; பொதுவிலக்கணம் 1-81 ; 128-222 ; 230-256 ; 422-437.

II (அ) சிவஞானபோதம் - சிவஞானசுவாமிகள் சிற்றுரை முழுவதும்.

(ஆ) சிவஞானசித்தி - சிவஞானசுவாமிகள் உரைமுழுவதும்.

(இ) சிவஞான சுவாமிகள் உரைக் கொத்து.

---

# சமாஜத்தின் 28-ம் ஆண்டுவிழா

## வரவு செலவுக் கணக்கு

### வரவு

| | | | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|
| 1. | சைவ சித்தாந்த சபை, | தஞ்சை. | ... | 10 | 0 | 0 |
| 2, | T- A. சிவசங்கரம் பிள்ளை, | ,, | ... | 5 | 0 | 0 |
| 3. | S. V. இராஜகோபால பாகவதர், | ,, | ... | 5 | 0 | 0 |
| 4. | பஜ்ஜி. நாகசாமிச் செட்டியார், | ,, | ... | 5 | 0 | 0 |
| 5. | சங்கீதம் நாகசாமிச் செட்டியார், | ,, | ... | 2 | 0 | 0 |
| 6- | நா. நா. சித. சிவ. | ,, | ... | 5 | 0 | 0 |
| 7. | ராம. பஞ்சநதம் பிள்ளை. | ,, | ... | 10 | 0 | 0 |
| 8. | அ. ஆ. சிவ. பஞ்சநதம் பிள்ளை. | ,, | ... | 5 | 0 | 0 |
| 9. | E. R. R. M. A. L. S. P. | ,, | ... | 3 | 0 | 0 |
| 10. | T. G. மாணிக்கம் பிள்ளை. | ,, | ... | 2 | 0 | 0 |
| 11. | T. P. K. அழகிரிசாமிப் பிள்ளை | ,, | ... | 5 | 0 | 0 |
| 12. | பொ. அரங்கசாமிப் பிள்ளை | ,, | ... | 3 | 0 | 0 |
| 13. | க. சண்முகம் பிள்ளை | ,, | ... | 2 | 0 | 0 |
| 14. | S. சோமசுந்தரம் பிள்ளை | ,, | ... | 2 | 0 | 0 |
| 15. | K. தம்பிச் செட்டி | ,, | ... | 1 | 0 | 0 |
| 16. | கொண்டி ரெ. ஆ. | ,, | ... | 1 | 0 | 0 |

| | | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|
| 17. | B. K. M. Sons | தஞ்சை ... | 5 | 0 | 0 |
| 18. | M. சிங்காரவேல் பிள்ளை | ,, ... | 3 | 0 | 0 |
| 19. | கணபதியா பிள்ளை | ,, ... | 5 | 0 | 0 |
| 20. | நா. கந்தசாமி பிள்ளை | ,, ... | 5 | 0 | 0 |
| 21. | ராம. சுப்பையா பிள்ளை | ,, ... | 5 | 0 | 0 |
| 22. | L. குமாரசாமிப் பிள்ளை | ,, ... | 3 | 0 | 0 |
| 23. | V. E. G. இராமச்சந்திரன் | ,, ... | 2 | 0 | 0 |
| 24. | K. விசுவநாத பிள்ளை | ,, ... | 6 | 0 | 0 |
| 25. | அ. கணபதி பிள்ளை, திரிசிராப்பள்ளி | ... | 10 | 0 | 0 |
| 26. | முராரி. இராமசாமிச் செட்டியார், தஞ்சை | | 5 | 0 | 0 |
| 27. | இராசரத்தினம் முதலியார், வழுத்தூர் | ... | 5 | 0 | 0 |
| 28. | V. நாடிமுத்துப் பிள்ளை, பட்டுக்கோட்டை | | 25 | 0 | 0 |
| 29. | சோமசுந்தர முதலியார், திருக்கொள்ளம்பூதூர் | | 1 | 0 | 0 |
| 30. | திருப்பனந்தாள் மடாதிபதிகள் | | 50 | 0 | 0 |
| 31. | *பெயர் விழையான் | ... | 160 | 6 | 2 |
| 32. | பூவாளூர் வைத்தியலிங்க ஐயர் | ... | 1 | 0 | 0 |
| 33. | குமாரவேல் பிள்ளை, தஞ்சை | ... | 2 | 0 | 0 |
| | | | 359 | 6 | 2 |

## செலவு

| | | | ரூ. | அ. | பை |
|---|---|---|---|---|---|
| 1. | உணவு | ... | 133 | 4 | 11 |
| 2. | முகவுரை, அழைப்பு முதலியன அச்சுக்கூலி | | 96 | 1 | 0 |
| 3. | அஞ்சல் | ... | 13 | 11 | 3 |
| 4. | போக்கு வரவு | ... | 58 | 0 | 0 |
| 5. | சுகாதார ஏற்பாடுகள் | ... | 12 | 10 | 0 |
| 6. | பந்தல் | ... | 5 | 0 | 0 |
| 7. | விளக்கு | ... | 9 | 0 | 0 |
| 8. | பூமாலைகள் | ... | 12 | 0 | 0 |
| 9. | சில்லரை வகை | ... | 19 | 11 | 0 |
| | | ரூபா | 359 | 6 | 2 |

*இவர் பெயர் திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையென்று ஊகிக்க இடமுண்டு.

# சென்னை மாகாணத் தமிழர் மகாநாடு

## அறிக்கை 1.

நிகழும் 1934ஆ மார்ச்சுமாதக் கடைசியில் வரும் ஈஸ்டர் விடுமுறையில் சென்னை மாகாணத் தமிழர் மகாநாடொன்று திருநெல்வேலியில் நடைபெறும்.

மகாநாட்டுத் தலைவர் :—திருவாளர் த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் B. A., B. L., தஞ்சை.

வரவேற்புத் தலைவர் :—திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M. A., M. L.,

வரவேற்புத் துணைத் தலைவர்கள் :—மறைத் திருவன் சாமி - விருதை சிவஞானயோகியவர்கள், திரு. M. S. பூரணலிங்கம் பிள்ளையவர்கள், B. A.

அமைச்சர்கள் :—திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், திரு. பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள்.

பொருளாளர் :—திரு. தி. மு. சங்கரலிங்கம்பிள்ளையவர்கள், B. A., திரு. காருடை சூரிய மூர்த்திப்பிள்ளை யவர்கள்.

மகாநாட்டின் நோக்கம் :—“சென்னை மகாணத் தமிழர் சங்கம்” ஒன்று நிலை பெறச்செய்து அதன் வாயிலாக, மத நூல்களும் மொழி பெயர்ப்புக்களும் தனித்தமிழில் வெளிவருமாறு செய்வதும், (2) அடிக்கடி தமிழர் மகாநாடுகள், தமிழ்ப் புலவர் மகாநாடுகள் கூட்டித் தமிழ் மக்களிடை அறிவும் அன்பும் ஒற்றுமையும் மல்கச் செய்வதும் ஆகும். தமிழ்ப் பெருமக்களனைவரும் வேண்டும் துணை புரிந்து மகாநாட்டைச் சிறப்பாக நடத்தித் தரும்படி வேண்டுகிறோம்.

இ. மு. சுப்பிரமணிய பிள்ளை,

16-1-1934. மகாநாட்டு அமைச்சர்.



சைவ சித்தாந்த மகா சமாஜ

## 28 - ஆம் ஆண்டு நிறைவு விழா

# தலைமைப் பேருரை

[திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார்]

(மலர் எ - இதழ் க - கo - ம் பக்கத் தொடர்ச்சி)

இனி, தமிழருடைய மற்றொரு சிறந்த கொள்கை பிறப்பினால் உயர்வு தாழ்வு இன்று என்பது.

"பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்கும் சிறப் பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்,"

"நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொருள் ஒன்றோ, தவம், கல்வி, ஆள்வினை
என்றிவற்றா னாகுங் குலம்."

என்பன தமிழருடைய அடிப்படையான கொள்கையைத் தெரிவிப்பன. பன்னிரு திருமுறைகளையும், எழுத்தெழுத் தாகச் சோதித்துப்பார்ப்பின் சைவசமயத்தின் அடிப்படை கொள்கையும் இதுவேயென்பது போதரும். சமயநெறியிலே சாதி குலம் என்னும் எண்ணம் உதித்தலே உய்தியில் குற்ற மாம் என்பது சான்றோர் கருத்து.

இனி, இதனைப்பற்றி இங்கே பேசும்போது பெருங் கிளர்ச்சியுடன் நடைபெற்று வருகின்ற இக்கால நிகழ்ச்சி யொன்று யாவருடைய நினைவிற்கும் வாராமற் போகாது. அது குறித்து ஒன்றுங் கூறாது விடின், அது படிறு; அல்லது கோழைமையின்பாற்படும். எக்குடியிற் பிறந்தார்க்கும் அவ ரது சமயக் கோயிலிற் சென்று ஆண்டவனை வழிபட உரிமை வேண்டுமென்பாரும், சிலர்க்கு அது கூடாதென்பாரும் சம யப் பற்றுடையவர்களே; சமயம் மாசின்றி நிலைபெறவேண்டு மென்னும் எண்ணம் உடையவர்களே; ஆதலின் ஒருவர்

கருத்தை மற்றொருவர் பரிவுடம் ஆராய்ந்து பார்த்தல் முறையாகும். நான் இங்கே கூறக்கருதுவன, நூன்முறையுடன் மாறு படாத சில வரலாற்றுண்மைகளே. அவற்றை ஆய்ந்து துணிதல் இப்பேரவையோர்கடனும், ஏனை அறிஞர்கடனுமாம்.

திருக்கோயில்கள் இப்பொழுது காணப்படுதல் போன்றே பண்டைநாளில் இருந்தனவல்ல. முன்னாளில் மரங்களினடியிலும், மன்றங்களினும், நட்ட கந்துருவங்களிலும் கடவுளை வழிபட்டுவந்தனர். பின்பு, நாளடைவில், மண்டபங்களும், திருச்சுற்றுக்களும் பிறவும் சிறிதுசிறிதாகப் பெருகிவர, அவற்றை அமைக்கும் ஆகம விதிகளும் ஏற்படலாயின. இப்பொழுதும் ஒரு மரத்தடியில் வைக்கப்பெற்ற பிள்ளையாருக்குச் சிறுபந்தரும், மண்டபமும், கோயிலும் முறை முறையே உண்டாதலைக் காண்கின்றோம். இவ்வாறேதான் பண்டைநாளினும் கோயில்கள் யாவும் தோன்றின. யானை முதல் எறும்பு ஈறாக உள்ள அனைத்துயிர்களும் கடவுளை வழிபட்ட செய்தியைப் புராணங்கள் புகல்கின்றனவே. இப்பொழுதுள்ளன போன்ற கோயில்களிலா அவை வழிபட்டன? கோயில்கள் பண்டை நாளில் எப்படியிருந்தனவேனும், இப்பொழுதுள்ள வழக்கத்திற்கு மாறாக யாதுஞ் செய்தல் பொருந்தாதெனின், வழக்கம் என்பதும் யாண்டும் ஒரு பெற்றியாகக் காணப்படவில்லையே. தமிழகத்திலேயே, ஒரு நாட்டுக் கோயிலிற் புகுதற் குரியரல்லார் மற்றொரு நாட்டுக் கோயிலிற் புகுதற்குரியராதலும், தமிழ் நாட்டின் எப்பகுதியிலும் கோயிலிற் புகலாகாதவர் வேறுநாட்டுக் கோயிலிற் புகுதற்குரியராதலும் காணப்படுதலின், நூல்களோ வழக்கமோ இன்னின்னார் கோயிலிற் புகத்தகாதவர் என அறுதியிடுவதாகத் தோன்றவில்லை. சில வகுப்பினர் யாண்டும் கோயிலிற்புகுவதில்லையெனினும், ஒரு சார் நூல்களும் அதற்காதரவாக விருப்பினும், நம் பெருமக்களுடைய உண்மைக் கருத்தினை ஊன்றியுணர்தலும், நமது சமயத்தின் ஆக்கத்தை நாடுதலும் நமக்குரிய கடனாம். சாதி, குலம் என்பன உலகியல் நடை பேற்று முறையில் ஏற்பட்ட சிலகட்டுப்பாடுகள், அல்லது சட்ட திட்டங்கள். சமயங்களோ

உயிர்களின் கடைத் தேற்றத்திற்குரிய நெறிகள். உடல் பற்றுக் கோடாகத் தோன்றிய சாதி, உயிரின் ஈடேற்றத்தைக் குறிக்கோளாகவுடைய சமயத்திற் புகுந்து சில மக்களை அதற்குரியரல்லராக்குதல் முறையாகுமா? நம் சைவ சமய அருட்குரவர்கள் கோயில்தோறுஞ் சென்று இறைவனை வணங்கி உய்யுமாறு பதிகங்கள்தோறும் வற்புறுத்தருளியது சிலரைமட்டுங் கருதியோ? சிவநெயர்காள்! இவற்றை ஓர்ந்து பாருங்கள். வடமொழிக்கடலும், தென் மொழிக்கடலும் நிலை கண்டவரும், வேதாகமங்களின் விளைபொருளெல்லா முணர்ந்து சிவஞான போதத்திற்குத் திராவிட மாபாடியம் என்னும் ஒப்பற்ற பேருரை வகுத்தவருமாகிய மாதவச் சிவ ஞான முனிவர்,

> "சிவனெனு மொழியைக் கொடிய சண்டாளன்
> செப்பிடினவனுடனுறைக
> அவனொடுகலந்து பேசுகவவனோ டருகிருந்
> துண்ணுகவென்னும்
> உவமையில் சுருதிப்பொருள்தனை நம்பா
> வூமரோடுடன் பயில்கொடியோன்
> இவனெனக் கழித்தால்ஐயனே கதிவேறெனக்கிலை
> கலைசையாண்டகையே"

என்றருளிய அருமைச் செய்யுளின் பொருளைச் சிந்தனை செய்யுங்கள். அருமறையின் துணிபு இதுவென்றும், அதனை நம்பாதவர் இத்தகைய ரென்றும், அவ்வன்கண்ணரொடு உடன் பயிலுதலே இறைவனுக்கும் வெறுப்பினை விளைக்கும் பெருந்தீங்காமென்றும் அருளிச் செய்ததனை அறிந்து வைத்தும், அதனைப் புறக்கணித்தொதுக்கி மாறு படப்பேசுவோரும் சைவராவரோ? அன்னார் அவரைப் போற்றுதலும் உண்மையாமோ? மற்றும் சமயத்தின் நிலைபேற்றைவிரும்புவோர் 'புறச்சமயம் புகுவோர் புகுக, சைவசித்தாந்தத் தேனமுதருந்துவோர் சிலரிருந்தாற் போதும்' என அமைதல் சாலாது. பலரிருப்பினன்றி இக்கால நிலையில் அத்தேனமுதைச் சிலரும் அருந்த முடியாதநிலை ஏற்படும் என்பது

உறுதி. காலமென்னும் கடுநீர்ப் பெருக்கானது சமய நெறியுள்ளும், முன்னும் எத்தனையோ பல மாற்றங்கள் செய்துள்ளது, இனியும் செய்ய வல்லது என்பதனை உணர்ந்து அதற்கேற்பத் தலைசாய்த்துக் கொடுப்பதே அழிவினைத் தடுக்கும் சதுரப்பாடாகும்.

அறிஞர்களே!

இம் முன்னுரையில் இன்னும் இதனை நன்கு விரித்துரைத்தல் ஒல்லாது. என் அறிவிற்கு உண்மையாகப் புலப்பட்ட அதனையே கூறினேன். நெடுநாள் இல்லாதிருந்த ஒரு செய்தியை வழக்கத்திற்குக் கொண்டு வருவதில் சிற்சில இடர்ப்பாடுகள் இருத்தல் கூடும் என்பதனை யுணர்வேன். சமயத்தின் துணிபு இதுவென்பதனை உடன்பட்டு, ஒல்லும் வகை பணியாற்ற வேண்டுமென்பதே என் கருத்து. இங்கு நான் கூறியது தவறுமென யாரேனும் ஆதாரத்துடன் எடுத்துக் காட்டின், அதனை நன்கு சிந்தித்து உண்மைகாண முயல்வேன்.

இனி, சைவசித்தாந்த மகாசமாசத்தின் பணிகள் சிலவற்றைக் குறிப்பிட விரும்புகின்றேன். சமாசம் இதுவரை சமயத்திற்குப் பலதொண்டுகள் புரிந்துள்ளன வென்பதில் ஐயமில்லை. அதிலும் சில ஆண்டுகளாகச் சைவத் திருமுறைகள் யாவற்றையும் யாவரும் எளிய விலைக்குப் பெற்றுப்படிக்குமாறு அழகுற அச்சிட்டு வருஞ்செயல் மிகவும் பாராட்டற்குரியது. இந் நன் முயற்சியில் ஈடுபட்டுழைக்கும் சமாச வுறுப்பினர்கட்குச் சைவவுலகம் முழுதும் கடப்பாடுடையதாகும். இங்ஙனமே மெய்கண்ட நூல்களையும், பிற சைவ நூல்களையும் அச்சிட்டுதவும் பணியைச் சமாசம் மேற்கொள்ளுமென்னுந் துணிபுடையேன்.

சமய வளர்ச்சியின் பொருட்டுச் சமாசம் மேற்கொள்ள வேண்டிய பணிகள் மற்றும் எத்தனையோபல உள்ளன. சைவ சமயத்தவருள் தங்கள் சமய உண்மைகளை அறிந்தவர்கள் எத்தனை பேருளர்; தங்கள் சமய நூல்கள் இன்னவென்றும், சமய குரவர் இன்னாரென்றும் அறிந்தவர்களா

வது நூற்றுக்கு ஐந்துபேரிருப்பரோ? இந்தநிலைமையில் இன்னும் எவ்வளவு காலத்திற்குச் சைவ மக்களை விட்டு வைப்பது? சைவரென்போர் யாவரும் தம் சமய உண்மை களை ஓரளவேனும் தெரிந்து கொள்ளவேண்டின், சமாசம் உடனே மேற்கொள்ள வேண்டிய பணியாவது தகுதியுடைய சமயச் சொற்பொழிவாளர் ஒருவரேனும் ஊர்தோறுஞ் சென்று விரிவுரை யாற்றும்படி ஏற்பாடு செய்தலாகும். மற் றும் தமிழ் நாட்டின் இன்றியமையாத இடங்களிலேனும் ஆண்டுதோறும் சிலராவது சைவசித்தாந்த நூல்களை முறை யாகக் கேட்டுப் படிக்கும்படி தூண்டுதல் வேண்டும். சித்தாந்த வெளியீட்டிலும் சைவசமய உண்மைகளை அனை வரும் எளிதில் உணரும்படியாகத் தனித்தனியே விளக்கி எழுதிவரல் வேண்டும். மிக எளிமையுடைய இரண்டொரு பணியையே இங்கே குறிப்பிட்டேன். ஆனால் என் விருப்பம் உலகமுழுதும் சைவசமய மாண்பினை அறியும்படி செய்து "சேரவாரும் செகத்தீரே" என அழைக்கவேண்டு மென் பதாகும். சமாசம் தன் பணியைச் செய்யுமாறு, சைவர்கள் யாவரும் அதில் உறுப்பினராகச் சேர்ந்தும் பிறவாறும் உதவி புரியுங் கடமைப்பாடுடையராவர். முடிவாகச் சைவமக்கள் எல்லாருடைய நினைவுக்கும் நான் கொண்டுவர விரும்புகின் றவை, சைவர்களெல்லோரும் தாழ்வெனும் தன்மையுடைய ராதல் வேண்டும்;

'நின்றும் இருந்துங் கிடந்து நடந்துநினை
என்றுஞ் சிவன்ற ளிணை'

என்றபடி, எப்பொழுதும் சிவபெருமான் திருவடிகளைச் சிந் தித்தல் வேண்டும்; தீமை யெல்லாவற்றையும் போக்கி நன்மை யனைத்தையும் தரவல்ல திருவைந்தெழுத்தை இடை யறாது உருப்பெற உன்னி ஓதுதல் வேண்டும்; சைவத்திற் கும் நமக்கும் வாழ்வளித்த சமய குரவர்களை மாறா அன் புடன் போற்றி யொழுகுதல் வேண்டும்; இவற்றால் தாம் எய்தும் இன்பத்தை வையகமுழுதும் எய்துகவெனச் சிந் தித்தல் வேண்டும் என்பனவே.

அறிஞர்களே!

இதுகாறும் நான் கூறியவற்றை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த நுங்கள் பொறுமைக்கும் பெருமைக்கும் வணங்குதலுடையேன். நான் இங்கிருக்குமாறு பணித்த சமாச அன்பினர்கட்கு மீண்டும் என் வணக்கத்தைச் சேர்ப்பிக்கின்றேன்.

"நமச்சிவாய வாஅழ்க, நாதன்தாள் வாழ்க"



சைவ சித்தாந்த மகா சமாஜ

# இளைஞர் மகா நாட்டுத் தலைமைப் பேருரை

[திரு. நீ. கந்தசாமி பிள்ளை]

(மலர் எ - இதழ் க - கசு-ம் பக்கத் தொடர்ச்சி)

இறைவன் கூத்தப் பெருமானாக எழுந்தருளியுள்ள நிலை இவ்வைந் தொழிலைக் காட்டுவதேயாகும். ஆன்மாக்கள் பெறவேண்டுவது இறைவனது திருவடிப் பேறாகிய பேரின்பமே யென்பது நமது தத்துவ முடிவாகும். அப்பேற்றினை யடைதற்கு உயிர்கள் ஆற்ற வேண்டிய பலபடியான செயல்கள் உள. அவற்றை ஒருவகையில் பத்துப் படிகளாகப் பிரித்துக் கூறுவதுண்டு. அவை, மண்முதல் ஒலி ஈறாகவுள்ள தத்துவங்களுடைய நிலை இயக்கங்களை அறியும் தத்துவ ரூபம்; அவை யெல்லாம் அறிவில்லாதனவென அறியும் தத்துவ தரிசனம்; இறைவன் அருளினாலே தத்துவங்கள் தமக்குப் புறம்பாயவையென அறிந்து நீங்கும் தத்துவ சுத்தி; முதலாக ஆன்ம நிலையும் இறை நிலையுமுணர்ந்து இறைவனோடு இரண்டற நின்று பேரின்பம் துய்த்தல் வரையிலும் ஆகும். பேரன்பர்களே! நமது தத்துவம் எத்தகையதென ஒருவாறு மேற்பார்வையாகப் பார்த்தோம். இளைஞர்க

ளாகிய நாம் எந்த முறையில் சித்தாந்தத்திற்குத் தொண்டு செய்வ தென்பதை இப்பொழுது ஆராய விரும்புகிறேன். நாமோ இளைஞர்; நமது தத்துவமோ முதிர்ந்த நிலையி லுள்ளது. சிந்தையுஞ் செயலும் அற்ற நிலையிலன்றோ நமது உயிர்கள் அடையவேண்டிய முடிவாகிய பேரின்பத்தின் புற வெல்லையின் சேயதோர் கோடியையேனும் அணுகக் கூடும், இப்போது என் செய்வது என்ற மனத் தளர்ச்சி நமக்கு ஏற்படா வண்ணம் நமது தத்துவமுறை அழகான வரிசை யில் அமைக்கப்பட்டிருக்கிறது. இளைஞர்களாகிய நாம் மேற் கூறிய பத்து வகையான செயல்களில் முதலாவதான தத் துவ நிலை இயக்கங்களை அறியத் தொடங்கி அவ்வறிவின் பயனை நம்மவர் அனைவரும் நுகருமாறு நமது தாய் மொழி யிலேயே வெளியிடலாம். இவ்வாறு தத்துவ அறிவைப் பெறுதற்கு இதுகாறும் மண்முதல் ஒலிஈறுான தத்துவங்களை மேல்நாட்டார் அறிந்திருக்கின்ற முறைகளையெல்லாந் திரட்டி நீவிரும் புதுவதாக ஆராய்ச்சி செய்து அவற்றையெல்லாம் நம் மொழியிலே ஆக்கித்தரால் வேண்டும். இத்தகைய தொண்டின் பயனாக நாம் மண், நீர், தீ, வளி, கால் முதலிய பல தத்துவங்களின் நிலைகளையும், இயக்கங்களையும் நன் குணர்ந்து அவற்றின் பலவகையான கூட்டங்களினாலும் பிரிவுகளினாலும், உலகம் வியக்கத்தக்க பலபல புதுமைகளைத் தேர்ந்து உலகிற்குப் பேருதவி செய்யலாம். உலகத்தின் பல பாகங்களிலும், சில பெரியோர்கள் தோன்றி, நீராவி, மின் பொறி, ஒலிஅலை, வளிஇயக்கம் முதலியவற்றின் நுண்மை களை நன்குணர்ந்து, அவற்றை மக்களுக்குப் பயனளிக்க வல்ல முறைகளில் பொருத்தி, யாவரும் கண்டு வியந்தின் புறத் தக்க செயல்கள் பலவாற்றியிருத்தல் நாம் அனைவரும் உணர்ந்ததே யாகும். இப்பெரியோரை யெல்லாம் ஆங் காங்கு நிலவிவரும் சமயங்கள் தமது சமயத்துக்குப் புறம் பாகவே கருதி வருகின்றன. நமது தத்துவ முறையிலோ வென்னில், இவர்கள் இறைவனை அடையவிருக்கும் பத்து நிலைகளுள், முதல் நிலையினராகக் கருதப்படுவார்களல்லரா? உலகெங்கும் அறிவு நூல்களும் சமய நூல்களும் ஒன்றோ டொன்று மாறுற்றுக் கலாம் விளைத்து இன்னல்படவும்,

நமது சித்தாந்தமோ, இக்காலத்துப் பலரும் போற்றும் அறிவுநூற் கொள்கைகளை ஆராய்ச்சி செய்து தெளிதலையே சமயத்தின் முடிவான பேரின்பத்துக்கு அடிப்படையாக வகுத்திருப்பது பெரிதும் போற்றத் தக்கதேயாகும். இத் தகைய சீர்மலிந்த கொள்கைகளை வேறு எங்கும் காண வியலாதென்று உறுதியாகக் கூறலாகும். அன்பர்களே! நமது சித்தாந்தத்தின் உயர்வை பரந்த உலகம் எக்காலத்து தெரிந்து போற்றப் போகின்றது? அதனை உங்கள் உரிமை யாகக்கொண்ட நீவிர் அவ்வுண்மைகளை உலகிற் பரவச் செய் யும் முறையில் எவ்வகைத்தொண்டு ஆற்றவல்லீர்? "யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" எனக்கூறிய பெரியார் உங்கள் முன்னோரல்லரா? நீவிர் இதுகாறும் சித்தாந்தத் தேன் பருகி இன்புற்றிலீர் போலும்! அதுகுறித்து வாளாவிருக்கின் றீரோ? காலம் தாழ்க்காது நாம் அனைவரும் ஒன்றுகூடி சித் தாந்த உண்மைகளைத் தக்க ஆசிரியர்பால் கேட்டு, காலநிலைக் கேற்ப ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும். மரபாகக் கேட் கப் பெற்றுவரும் சில சிறந்த உண்மைகள் போற்றுவாரின்றி மறையும் நிலையில் இருக்கின்றன. இவ்வுண்மைகளை அனை வரும் அறியும் வண்ணம் தெளிவாக வெளியிடுவதினால் சிறந்த பயனெய்தலாம் என்பதில் ஐயமேயில்லை. இவ்வுண்மை கள் மறைந்து கிடக்கும் இடங்களை நாடித் தெரிந்து கொள் வதே தம்முடைய முதற்கடமையாக நமது இளைஞர்களிற் சிலர் மேற்கொள்ள வேண்டும். இதனை மேற்கொள்ள வல் லார் நம்மவர்களில் மாணவர்களே யாவர். அவர்களுள்ளும், பல்கலைக்கழகங்களில் தத்துவபாடங்களைச் சிறப்பாகப் பயின் றவர்களே பெரிதும் தகுதியுடையாராவர்.

நமது சித்தாந்தக் கொள்கைகளில் ஊறி வளர்ந்த பெரி யோர்கள் உலக வாழ்க்கையை எவ்வாறு நடத்தி வந்தார்க ளென்பதையும், எவ்வாறு இருக்கவேண்டும் என்றெண்ணி வந்தார்களென்பதையும், அதனாற் பெற்ற, பெறுதற்காய பலன்களையும் நாம் கருதவேண்டியது இன்றியமையாததா கும். இத்தகைய ஆராய்ச்சியில் நமது உலகவாழ்வு மேம்படு தற்காய பல உண்மைகளும் வெளிவருதல் கூடும். எத்தகைய

சீரிய அரசியல் முறைகளும், வாழ்க்கை முறைகளும் அதனை நடத்துவார்களது உள்ளப் பான்மையின் உயர்வினாலேயன்றி வேறெவ்வாற்றானும் சிறவாதென்பது உலகறிந்த உண்மை யாகும். அரசியல் முறையைத்திருத்த முன் வருவோரினும் மக்கள் உள்ளப் பான்மையைத் திருத்த முன்வருவோர்களே பெரியோராவர். அவ்வாறு உள்ளப் பான்மையைத் திருத்து வதற்கு உலகின் நன்மை தீமைகளையும் அவற்றின் காரணங் களையும் கண்டு தேர்தலும் தேர்ந்த பெரியார்களது நோக்கங் களைத் துணைக்கோடலும் வேண்டற் பாலனவாகும்.

இம்முயற்சியிலும் நமது இளைஞர்கள் ஈடுபட்டுப் பெரி யோர் நோக்கங்களை உலக வாழ்வில் பெரிதும் பரவச் செய்ய வேண்டும். நம்முடைய பெரியோர்கள் நன்மை தரத்தக்கதெ னத் தேர்ந்த வாழ்க்கை முறை பலவற்றுள் எடுத்துக் காட் டாக ஈண்டு ஒன்று கூறுகின்றேன். ஒரு பெரியார் தனக்கு உலகத்தே தோன்றும் பொருள்களில் உளதாய வெறுப்பு விருப்புக்களை உற்று நோக்கினார். தாம் வெறுப்பாகக்கொண்ட வெல்லாம் தன்னுடையநலத்திற்குத் தீங்குபயப்பனவாகவும், விருப்பாகக் கொண்டவெல்லாம் நன்மை பயப்பனவாகவும் தோன்றின. தன்னோடுதொடர்பு படுத்தாமல், முன்வெறுப்பு விருப்பாயிருந்த பொருள்களைத் தனித்தனி ஆராய்ச்சிசெய்த காலத்து, விருப்பு வெறுப்புக்கேற்ற தன்மைகள் ஒன்றும் புலப்படவில்லை. பின்னர் எல்லாப் பொருளிலும் ஒரே தன் மையாகக் கலந்துள்ள இறைவனோடு அப்பொருள்களைத் தொடர்பு படுத்திப் பார்க்குங்கால் எல்லாப் பொருள்களும் இன்ப உருவினவாகவும் அருள் பயப்பனவாகவும் தோன் றின. உடனே அவர் எல்லாப் பொருள்கள் மாட்டும் தம்மோ டுடைய தொடர்பை மறந்து இறைவனோடுடைய தொடர்பை எண்ணி நடத்தும் வாழ்வே சிறந்ததெனக் கொண்டு,

> “ தம்மை மறந்து நின்னை நினைப்பவர்
> செம்மை மனத்தினும் தில்லை மன்றினும்
> நடம் ஆடும் அம்பலவாண ”

என்று அவ்வாழ்வைக் குறிப்பாகப் போற்றுவாராயினர்.

"கண்ணிற் காண்பது எவ்வுலகினும் காண்பன
எல்லாம் நீயேயாகி நின்றதோர் நிலையே"

என்றும் அவ்வாழ்க்கையை வற்புறுத்தலாயினர். எந்நிலையி லும் வாழ்வு இன்புறுதற்கு இத்தகைய கொள்கையை மேற் கொள்ளல் சால்புடைத்தென்பது வாழ்க்கையின் பல நிலைகளி லும் பொருத்திக் காண்பார்க்கு நன்கு விளங்குவதாகும். இவ்வாறு காணப் பெறும் பல வாழ்க்கை உண்மைகளையும் தெரிந்து, வெளியிட்டுப் பலரும் போற்றச் செய்து, அதன் வழி மக்கள் உள்ளப் பான்மைகளைச் சீரியமுறையில் திருத்து வது சைவ இளைஞர்களின் கடமையாகும்.

நண்பர்களே!

சித்தாந்தத்தோடு கலந்து நிற்கும் நமது தமிழ் மொழியோ, பரம்பொருளொப்பத் தோற்றம் தெரியவொண் ணாததாய், உலகத்தில் வழங்கும் மொழிகளுளெல்லாம் மிக வும் பழமை வாய்ந்ததாய், தன்னோடொத்த மொழிகளும், தனக்குப் பின் தோன்றிய மொழிகளும், மக்கள் உள்ள வளர்ச்சிக்கேற்ப வளரவாற்றாதனவாய் இறந்தொழியத் தான் ஒன்றுமே இறந்த காலப் புகழெல்லாம் தாங்கி எதிர் காலச் சீரெல்லாம் நோக்கி நிற்கும் பேரரசியென்னத் திகழ் கின்றது. இதன்கண் அமைந்துள்ள நுண்ணிய இலக்கண நூல்களும் பண்டைய மக்களின் வீரம், கொடை, உள்ள நெகிழ்ச்சி முதலியவற்றை விளக்கும் சங்க நூல்களும், மக் கள் கொண்டொழுகவல்ல நீதிகளைத் தெளிவுபடுத்திக் கூறும் நீதி நூல்களும், தெய்வமணங் கமழும், இறைவனைப் போற்றும் பாடல்களும் உண்மை தெரிக்கும் தத்துவ நூல்களும் எண்ணிறந்தன. ஆன்றோர்கள் உளங்கசிந் துருகிப்பாடிய தேனூறும் பாக்களை யாம் பயிலுங்கால் உள வாகும் இன்பத்திற்கு இணை, இவ்வுலகில் பிறிதொன்றில்லை. இணையாக ஒன்று கூறவிரும்பின், இறைவன் திருவடியின் பத்தையன்றிப் பிறிதெதனைக் கூறுவது? இதுகுறித்தே நமது கச்சியப்ப முனிவரும்,

"ஆயுந்தொறும் தொறும் இன்பம் தருங்கலை ஆங்கறிவு
மாயுந்தொறும் தொறும் இன்பம் தரும்வள்ளல் வார்கழல்கள்"

எனக்கலையாராய்ச்சியின் இன்பத்தைப் புகழ்வாராயினர்.

நமது தமிழ்ப் பாக்களைப் பயிலுங்கால், அவற்றின் ஆற்றலால், நாம் நம்முடைய நிலையை அறவே மறந்து, அப் பாக்களால் கூறப்பெறும் நிலையில் நம்மையறியாமலே புகுந்து அவைகளோடு ஒன்றிவிடுவதைக் கண்கூடாகக் காணலாம். இவ்வாறு பல பல பாக்களைப் பயிலுவதால் உள்ளம் பண் படைந்து சிறப்புறுகின்றது. எடுத்துக் காட்டாக ஆளுடைய பிள்ளையார் அருளிய விடந்தீர்த்த பதிகத்தைப் பாருங்கள். கனலிசான்றாக மணம்செய்ய எண்ணித் தொடர்ந்து வந்த காதலன் அரவு தீண்டி இறப்ப, ஓர் துணையுமின்றி ஏங்கியாற் றும் கற்புக்கரசியைக் கண்டு மனம் நெகிழ்ந்து பிள்ளையார் அருளிய பாடல்களை, ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்குப் பின்பு இன்று நாம் பாடுவோமானாலும், உள்ளம் நலிந்து கண் ணீர் பெருகுகின்றது. அச்சொற்களின் எளிமையை நோக் குங்கள்,

"சடையாய் எனுமால் சரண்நீ எனுமால்
விடையாய் எனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள்உள் மெலிவே"

அக்கற்புடை மகள் அரற்றும் சொற்களைக் கூறுகின் றார்; அவள் விழுகின்ற செயலைக் குறிக்கின்றார்; இறைவனை விளிக்கின்றார்; ஈதும் முறையோ என வினவுகின்றார். இத் துணை தான் நம் உள்ளத்தே தோன்றும் வேறுபாடுகள் எத்தனை ?

இவ்வாறே அருள்மயமாக நின்று ஆன்றோர் அருளிய பாக்களெல்லாம், நாம் அவற்றோடு கலந்துநிற்கும் சிறுபொழு திலேனும் நம்மை அருள்மயமாக்கி விடுகின்றன. தூய நிலையை அடைகிறோம். இது குறித்தன்றோ திருவாசகத் தைப் பெரியோர் பலவாறு போற்றுகின்றனர்.

"திருவாசகமிங் கொருகால் ஓதில்
கருங்கல் மனமுங் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியில் சுரந்துநீர் பாய

அன்ப ராகுநரின்றி
மன்பதை யுலகில் மற்றையரிலரே!"

என்பது இன்றும் உண்மை யல்லவா?

நமது பண்டைய நூல்களிற் பல, இக்காலத்தும் புதுவது எனப் போற்றத் தக்கக் கருத்துக்கள் பலவற்றைத் தம் மகத்தே கொண்டுள்ளன. அவற்றையெல்லாம் யாம் ஆய்ந்து வெளிப்படுத்த வேண்டுவதும் ஒரு கடமையாகும். இக்காலத்தில்,பிற மொழிகளில் பெரிதும் பாராட்டிப் போற்றப் பெறும் சில இனிய பகுதிகள், நம்மொழியில் சீரிய முறையில் அமைவுற்றிருப்பது அனைவரும் கண்டு மகிழற்பாலதாகும். உலகத்தாரால் பெரிதும் போற்றப்படும் ஓர் இந்திய கவிஞர் இறைவனை வழுத்தும் ஒரு பாடலில் மிகவும் அழகாகக் கீழ்க்கண்ட வண்ணம் கூறியிருக்கின்றார்:

*தென்றலஞ் செல்வன் வாயில்நின் றிரப்ப,
தன்திணி இதழ்களுள் ஒன்றிரண் டுகுக்கும்
நறுமல ரேய்ப்ப நின்றதென் இளமை.
இளமைதன் இறுதி எய்திய காலை,
தானலாற் பிறபொருள் நல்குதற் கிலதாய்த்
தன்சுவைப் பொதியுடன் தானே தன்னை
நாயகன் வரவு நோக்கிநின் றளிக்கும்
நறுங்கனி யேய்ப்ப நின்றதென் வாழ்வே!

இதன் கண் கவிஞர் வாழ்க்கையின் இரண்டு நிலையை மலருக்கும், கனிக்கும் ஒப்பிட்டுக் கூறியுள்ளது பெரிதும் இன்பம்

---

* My life when young was like a flower—a flower that loosens a petal or two from her abundance and never feels the loss when the spring breeze comes to beg at her door.

Now at the end of youth my life is like a fruit, having nothing to spare, and waiting to offer herself completely with her full burden of sweetness.

TAGORE, FRUIT GATHERING.

பயப்பதேயாகும். இப்பாடலோடு நம் தாயுமானர் அருளிய,

"விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான மீரூய்
அரும்பு மலர் காய்கனிபோல் அன்ரூே பாரபரமே"

என்னும் கண்ணியை ஒப்பிட்டு, பொருளை விரித்துப் பாருங்கள். நமது பெரியாரது பாடல்களெல்லாம் பிறமொழிகளில் வெளிவரின், எத்துணைச் சிறப்பாகப் போற்றப் பெறும் என்பதை எண்ணுங்கள்.

நமது மொழியில், பலதிறப் புலமையுடையாரும் கற்றின்புறத்தக்க நூல்கள் மலிந்துள்ளன. சொற்கள் அமைந்துள்ள முறையிலே இன்பம் பயக்கும் செய்யுள்கள் முதல் பொருட்பொலிவால் மெய்ப்பாடு தோற்றி வையகத்தில்வானகத்தை வரவழைக்கும் நூல்கள் வரை இங்குக் காணலாம். பண்ணொடு பாடவல்ல இசைப் பாடல்கள் பல எங்கெங்கோ ஒலியும் ஒளியும் காந்து மறைந்து கொண்டிருக்கின்றன.

**செந்தமிழ்ச் செல்வர்காள் !**

நீவிர் அனைவரும் செந்தமிழ்த்தாய்க்கு ஆற்றவேண்டிய தொண்டுகள் பலவுள. முதற்கண், நமது நாட்டிலேயே, நம்மவர்களே தமிழ்மொழியைப் பயிலும் வண்ணம் நீவிர் முயற்சிக்க வேண்டும். நமது மொழியிலுள்ள அரிய நூற் கருத்துக்களையெல்லாம் பிறநாட்டாரும் தெரிந்துகொள்ளும் வண்ணமும் பிறமொழியிலுள்ள அரிய நூற்கருத்துக்களை நம்மொழியிலே தெரிந்து கொள்ளும் வண்ணமும் மொழி பெயர்ப்புக்கள் பல செய்தல்வேண்டும். அரிய தமிழ்ப் பாக்களையும் காப்பியங்களையும் படித்து இன்புறுவதையே பொழுது போக்காக நம் ஓய்வுக் காலங்களிற் கொண்டு அதன் பெருமைகளைப் பிறர்க்கறிவித்து அவர்களும் இத்தகைய பொழுது போக்கில் ஈடுபடுமாறு செய்தல்வேண்டும். இதனல் அடையக் கூடிய நன்மைகள் பல. வெளிவராது பரண்களில் தூங்கும் சுவடிகளை யெல்லாம் இறந்துபடாது உலகில் உலவுமாறு செய்தல் வேண்டும்.

சைவ இளைஞர்காள்! நமது நாட்டில் மலிந்து கிடக்கும் கோயில்களைப்பற்றி எப்பொழுதேனும் சிந்தித்திருக்கின்றீர்களா? குறிகளாலும் அடையாளங்களாலும் நம்மை ஆட்

கொள்ளவேண்டி இறைவனுணையில் எழுந்தவை அவையென் பதை நீவிர் கருதியதுண்டா? இற்றைய வசதிகள் ஒன்று மற்ற அற்றை நாட்களில் நமது முன்னோர் கருங்கல் என்பது காணக்கூடாத, மருத நிலங்களிலெல்லாம் மலைகள் எழுந்தன வொப்ப எடுத்திருக்கும் தளிகளைக் காணும்தொறும் காணும் தொறும் அவர்கள் உள்ளப்பான்மையும் உறுவலியும் உங்கள் உள்ளத்திற்றோன்றி உட்கும் நாணமும் விளைக்க வில்லையா? இக்கோயில்கள் பலவும் நமது பண்டைய பெருமையையும், தமக்கென ஒன்றும் போற்றாது பிறர்க்கென வாழ்ந்த பெரி யாரது சிறப்பையும், குறிகளால் நமது தத்துவங்களை விளக்கி அறியாதாரும் அறியக்காட்டிய நுண்மையையும் சிற்பவன்மை யையும் நமக்குப் பலகாலும் நினைவூட்டி நிற்கின்றன. இத்தஞ்சைமா நகர்க்கண், மண்ணவர் விண்காண ஏறும் ஏணி ஒப்பவும், வானமென்னும் நீலக்கவிகையின் காம்பெனவும், இராசராசச் சோழரின் உள்ளத்தே ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுந்ததோர் இறைவன் உருவெனவும் ஓங்கி நிற்கும் பெருங்கோயிலைப் பாருங்கள். அதன்கண் நுண்ணியவேலைக்கு இடந்தராத கருங்கற்களைத் துணைக்கொண்டு நமது முன் னோர் உள்ளக் குறிப்புக்களை வெளிக்காட்டும் உருவங்கள் பல அமைத்திருத்தல் எத்துணை வியப்பைத் தருகின்றது? இச் சிறப்பெல்லாம் போற்றாது, இவைகளைப் புறக்கணித்து, அவைகள் தாமே காலவாற்றலால் அழியுமாறு விடுதல் நமக் குப் பொருந்துமா? இளைஞர்களாகிய நீவிர் இக்கோயில் களின் நுட்பங்களையும் பெருமைகளையும் யாவரும்போற்றும் வண்ணம், உங்கள் உங்கள் செயலுக்கேற்ற சிறு திருத் தொண்டுகளேனும் செய்ய வேண்டாமா?

உண்மையன்பர்களே!

> "காலையும் மாலையும் கால்பெயர்த் திடுவதன்
> ஆலயம் வலம் வருவதற்கே சால்பினில்
> கைகொடு குயிற்றுவது ஐயநின்னது
> கோயில் பல்பணி குறித்தே"

என்னும் ஆன்றோர் வாக்கைப் பின்பற்றி, நீவிர் அனைவரும் உங்களுக்கு அருகிலமைந்துள்ள கோயில்களுக்கு நாடோறும் சென்று இறைவனை வழிபட்டு வாழ்வது இன்றியமையாத

தாகும். நம்முட் சிற்சிலர் ஒன்றுகூடி ஒரு சிறு கூட்டமாகச் சேர்ந்து பழுதாயிருக்கும் கோயில்களுக்குச்சென்று பண்டைய அமைப்பு மாறுவண்ணம் ஏற்ற திருப்பணிகள் பலவும் செய்யலாம். பழங்கோயில்களுள் மறைந்துகிடக்கும் கல்வெட்டுக்கள் பலவும், நமது நாட்டின் வரலாற்றிற்குப் பெரிதும் வேண்டப் பெறுவதாகலானும், ஏனைய வழிகளால் அறிந்து கோடற்கியலாத பல சமய உண்மைகளும், இலக்கிய மறைபொருள்களும், வாழ்க்கைமுறை நாட்டின் பிரிவு முதலிய குறித்த செய்திகளும், பிறவும் அவைகளிடையே தெளிவாகக் காணப்பெறலானும், சைவஇளைஞர் அவற்றைப்பொன்னே போற் போற்றித் திரட்டி வைத்துக்கொள்ளவேண்டும். பழங்கோயில்களிற் சிதைந்துகிடக்கும் பிறர்க்குப் பயன்படாக்கருங் கல்களும், கற்சல்லிகளும்கூட நம்மால் போற்றத் தக்கனவாகும். ஆங்காங்கு கிடைக்கும் கற்றூண்கள், சிற்பம் சிறந்த சிறுகற்கள் முதலியவற்றைத் தேடி எடுத்து ஒருபொது இடத்தில் கண்காட்சியாகக் கூட்டிவைத்தல்வேண்டும். அவைகளை யாம் காணுந்தோறும், அவைகளோடு தொடர்புடைய நம் முன்னோர்களது அருஞ்செயல்களெல்லாம் நம்நினைவிற்கு வந்து நம்மை ஊக்கவும்கூடும். நமது சைவப் பெரியார்களது உருவச்சிலை அமைந்துள்ள இடங்களை யெல்லாம் தேடிச் சென்று அவைகளுக்குப் படி எடுத்துக்கொள்ள வேண்டும். திருக்கோயில்கள் பலவற்றின் அமைப்புக்களையும், ஒன்றற்கொன்றுள்ள ஒற்றுமை வேற்றுமைகளையும் நன்குதெரிந்து, சிறப்பியல்களைத் தெளிந்து வெளியிடல் வேண்டும். பாடல் சால்பதிகளிலெல்லாம், அப்பதிகளுக்குரிய பாடல்களேனும் பலரும் பயிலும் வண்ணம் உதவிபுரிதல் வேண்டும். இத்தகைய தொண்டுகள் பலவுளவாகலின், அவரவர் தகுதிக்கேற்ப ஆவன செய்வீர்களாக.

**நண்பர்களே !**

சமயமும், தத்துவமும் எத்தகைய சிறந்த கொள்கைகளை உடையவேனும், அவற்றைச் சார்ந்தார் அக்கொள்கைகளைத் தங்கள் வாழ்க்கையில் பின்பற்றுகிற அளவிற்கும், முறைக்கும் ஏற்பவேஉயர்வு தாழ்வுகள் ஏற்படுகின்றமையின்

நாம் நம் சமயத்திற்குச் செய்யவேண்டிய சிறந்த தொண்டா கக்கொள்ள வேண்டியது நம்நிலைக்கேற்ப அக்கொள்கைகளை வாழ்க்கையிற்கொண்டு நடத்தலேயாகும். இறைபணி என்பது ஏதோ ஒரு காலத்தில் ஏதோ ஓர் இடத்தில் ஆற்றுவதொன் றெனக்கருதாது, எக்காலத்திலும் நம்முடைய எச்செயல்களி லும், இடையீடின்றிக் கலந்துநிற்கும் ஒன்றெனத் திண்ண மாகவுணர்ந்து அவ்வுணர்விற்கே நம்முடைய சிந்தை, செயல் சொல் முதலியவற்றை அடிமைப் படுத்திக் கொள்ள வேண் டும். அன்பும் அருளுமே நமது சமயத்தின் அடிப்படை யென்பதையும், அன்பு பெருகிய வழியே இறைவன் திரு வருளுக்கிலக் காகுகின்றோ மென்பதையும், உயிர்களிடத்துக் காட்டும் அன்பெல்லாம் இறைவனிடத்துக் காட்டுவதே என் பதையும்,

"ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே"

என்னும் மணிவாசகத்தாலும்,

"அன்பைப் பெருக்கி என் ஆருயிரை ஆண்டுகொண்ட
இன்பப் பெருக்கே இறையே பராபரமே"

என்னும் தாயுமானவர் அருட்பாடலானும்,

"ஈசனிடத் தன்புள்ளார் எவ்வுயிர்க்கும் அன்புள்ளார்"

என்னும் திருவாக்கானும் முறையே விளங்க வுணரலாகும்.

உண்மை அன்பரீர் !

இதுகாறும் நமது சமயம், தத்துவம், மொழி, கோயில் முதலியவற்றைப்பற்றி யான் கூறிய சிலவற்றை, என் புன் சொற்கள் நோக்காது, பொருள்களின் பெருமை நோக் கிச் செவி சாய்த்துக் கேட்ட தங்களுக்கு என் உளமார்ந்த வணக்கத்தைத் தெரிவித்து, இவ்வாண்டில் இளைஞர்களாகிய யாம் செய்யவேண்டிய பணிகளைத் திட்டம் செய்யுமாறு தங் களைக் கேட்டுக் கொண்டு நிற்கின்றேன்.

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே"

சைவ சித்தாந்த மகாசமாஜ

28-ஆம் ஆண்டு நிறைவு விழா

# சைவ மங்கையர் மகா நாட்டுத் தலைமைப் பேருரை

[திருவளர்செல்வி. மாணிக்கவாசக சரோஜனியம்மையார்]

(இதழ் எ - மலர் க - 20-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி, முற்காலத்தில் ஆடவர்கள் எப்படிச் சிவபெருமானைத் தொழுவதிலும், சைவப்பணி ஆற்றுவதிலும் கருத்துடையவர் களாயிருந்தார்களோ, அப்படியே பெண்மக்களும் இருந்து வந்தார்களென்று பண்டைத் தமிழ் நூல்களின் வாயிலாக அறிகின்றோம். நாயன்மார்களின் வரலாறுகளைப் பயிலும்போது ஒவ்வொருவருக்கும் அவரவர் வாழ்க்கைத் துணையாயமைந்தவர்கள் தம் கணவர் கருத்திற்கேற்பச் சிவ பிரானிடத்தும் அவர் தம் மெய்யடியாரிடத்தும் நிரம்பிய அன்பு உடையவர்களாய், எந்நேரமும் இறைவனின் திருவடித்தாமரைகளை நெஞ்சத் தழுத்திய தல்லாமலும் தம் கணவர்க்குச் செய்யவேண்டிய பணிவிடைகளையுஞ் செவ்வனே செய்து முடித்தும் அடியார்களுக்குத் திருவமுது வழங்கியும் தம்மாலியன்ற அளவு சைவப்பணி செய்தும் வாழ்ந்தார்கள். தெய்வச் சேக்கிழார் தாம் அருளிய பெரிய புராணத்தில் சிறுத்தொண்ட நாயனர் வரலாற்றில் கூறுவதைப் பார்மின்கள்! சிறுத்தொண்ட நாயனாது பேரன்பினை உலகினர்க்கு வெளிப்படுத்தத் திருவுளங்கொண்ட சிவபிரான் உணவு வேண்டி வந்த துறவிபோல் வந்து ஒரு தாய்க்கு ஒரு பிள்ளையைக் கொன்று கறிசமைத்து வைத்தாலன்றி உணவருந்த முடியாதென்று சொன்ன காலத்தில் சிறுத்தொண்டர் சிறிதும் தயங்காமல் தமது அருந்தவப் புதல்வனைக்கொன்று உணவாக அளிக்க விரும்பியபோது, அவர் தம் இல்லக்கிழத்தியாகிய திருவெண்காட்டு நங்கையார் தாமும் தம் கணவர் விருப்பத்திற்குச் சிறிதும் மாறுகூறுமல் சிவனடியார் விரும்பியபடி உணவளிப்பதையே தம்முதற் கடனுக நினைந்து தாம் அரிதிற் பெற்றுப் பரிவுடன் வளர்த்து

வரும் கண்ணின் கருமணியனைய தம் ஒரே புதல்வனாகிய சீராளனைச் சிறிதும் மனம் வருந்தாமல் உவகையுடன் கறி சமைத்து வைக்க முன் வந்தாரென்று கூறியிருத்தலை நோக்குங்கள். இதனால் அவ்வம்மையார் தம் கணவர் சொற்கடவாத கற்பரசியென்றும், சிவபெருமானிடத்து மெய்யன்பு கொண்டவர் என்றும் அறிகின்றோம் அல்லமோ ?

இனி, இக்காலத்தில் பெண் கல்வியோ மற்ற நாடுகளைக் காட்டிலும் நம்நாட்டில் மிகக் குறைந்திருக்கிறது. சமயக் கல்வியைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. நம் தமிழ் நாட்டுச் சகோதரிகளில் முக்காற்பங்கிற்கு மேற்பட்டவர்கள் கடவுள் நேயம் உடையவராயிருக்கிறார்க ளென்பதை உணர்ந்து நாம் மகிழாமலிருக்க முடியாது. என்றாலும், அடியார்க் கெளியராகிய சிவபிரானை மட்டும் வணங்காமல் பல்வேறு தெய்வங்களை வணங்கி வருவதுமன்றி, அருள் வடிவாய் இலங்கும் எம்பெருமானின் விருப்பத்திற்கு மாறாகத் தாம் விரும்பிய சிறு தெய்வங்களுக்குக் கைக்கூலி கொடுப்பது போலத் தம் துயரத்தை வெளியிட்டு அழவோ, இடரிலிருந்து தப்பவோ திறனற்ற உயிர்களைப் பலி கொடுத்து மகிழ்ந்து அவற்றிற்குச் சுடுகாடாகத் தம் பாழும் வயிற்றையே பயன்படுத்தி வருவதையுங் காண உள்ளம் அனலிடைப்பட்ட மெழுகு போல் உருகுகின்றது.

இனி, முற்காலத்தில் ஆண்மக்களைப்போலவே பெண் மக்களும் சைவப்பணியில் ஆர்வமிக்கு இருந்தார்களென்பதை விளக்குதற் பொருட்டுச் சைவ சமயத்தை வளர்த்த நம் சகோதரிகளில் சிலரைப் பற்றி இங்கு எடுத்துக்கூற விரும்புகின்றேன். அவர்களுடைய வரலாற்றினை இங்கே குழுமியிருக்கும் நம் சகோதரிகளிற் பெரும்பாலோர் அறிந்திருக்கலாம். என்றாலும் அவர் தம் கற்பின் உறுதியையும், எந்தெந்த நிலையிலிருந்து தொண்டாற்றியுள்ளார்க ளென்பதையும், ஈண்டு நம் சகோதரிகளுக்கு விளக்கிக் கூறி, அவர்களைப்போலவே நாமும் நம்மாலியன்றவரை சைவ சமயத்தை வளர்க்க வேண்டுவது நம் தலையாய கடமை என்பதையும் நினைப்பூட்டுவேன். (தொடரும்)

